ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2038
சித்திரை - ஏப்ரல் 2007

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்



புத்தாண்டுப் பிறப்புநாள்
அருள்திரு சண்முகநாதனுக்கு
பால்குடம் எடுப்பு விழா 14-4-2007

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
| --- | --- | --- | --- |
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
| --- | --- | --- |
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

91/1

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2038 (சர்வசித்து) மாதம் : சித்திரை

மலர் : 21 இதழ் : 4




# மகா கவிஞன்!

பாரதி! இந்த யுகத்தின் தமிழ்த்தவம்!

"காக்கை குருவி எங்கள் சாதி" என்றான்.

*"சாதிமதங்களைப் பாரோம்! உயர்*
*ஜன்மம்இத் தேசத்தில் எய்தினராயின்*
*வேதிய ராயினும் ஒன்றே! -அன்றி*
*வேறு குலத்தின ராயினும் ஒன்றே!"*

என்று பாடினான்! மானுடம் உயர்வதற்கு எதுவும் தடையாய் இருக்கக் கூடாது என்பதே பாரதியின் சித்தம்! "வாழ்க, பாரததேசம்! வாழ்க, பாரத தேசம்!" என்று தேசத்தை நேசித்த கவிஞன், தேசியக் கவிஞன்!

*"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல்*
*இனிதாவ தெங்கும் காணோம்!"*

என்று தமிழ் மொழியை நேசித்த மொழிப்பற்றாளன்! உலக மானுடத்தின் உயர்வையே இலக்காகக் கொண்டு கவிதைப் பயணம் செய்தான்! கவிதை உலகத்தில் பாரதி தேசியக் கவிஞன். ஆயினும் மொழிப்பற்றாளன்; தொலைநோக்குச் சிந்தனையாளன்; ஆன்மிகக் கவிஞன் என்று பன்முகப் பரிமாணத்தில் பார்க்கப்பட்ட பாரதியின் உரைநடை உலகம், பரவலாகப் பலரைச் சென்று சேரவில்லை! அந்தக் குறையைப் போக்கும் வண்ணம் "பாரதியின் சமூகப்

பொருளாதாரச் சிந்தனைகள்" என்ற நூலில் தமிழ்நாடு திட்டக்குழுத் துணைத்தலைவர்பேராசிரியர் மு. நாகநாதன் அவர்கள் முழுமையாக நவீன சமுக, பொருளாதாரக் கண்ணோட்டத்துடன் எழுதியுள்ளார். பாரதி என்ற பொருளாதார விஞ்ஞானியை, பாரதியின் ஒட்டுமொத்த உயரத்தை சிறப்பாய்ப் படம் பிடித்துக் காட்டியுள்ளார். பாரதியின் அறியப்படாத, பல பக்கங்கள் அறிவுலகத்திற்கு அடையாளம் காட்டப்பட்டு இருக்கின்றது. தொலைநோக்குப் பார்வையுடைய சுதேசப் பொருளாதாரப் போராளி பாரதி என்பதை அற்புதமாய் உணர முடிகின்றது.

வெள்ளை ஏகாதிபத்தியத்தின் இருப்புப்பாதைப் போக்குவரத்து எதற்கு? நம்மில் பலர் ஆங்கிலேய அரசு நமக்குத் தந்த அறிவியல் கொடை என்று நம்பினோம்! பாரதி பொருளாதாரக் கண்கொண்டு சொன்னான்! சுரண்டும் ஏகாதிபத்தியப் பொருளாதாரம் தங்குதடையின்றி நடைபெறுவதற்காக என்றான். இந்தியச் சந்தையை அந்நிய தேசத்துப் பொருட்கள் ஆக்கிரமிப்பதற்கும் உள்நாட்டு உற்பத்தியை முடக்குவதற்கும் இருப்புப்பாதைப் போக்குவரத்து கால்கோள் இட்டது.!

இன்று பரவலாகப் பேசப்படுகின்ற தடையற்ற வாணிகம் (Free Trade) என்ற சொல்லை வர்த்தக நிர்ப்பந்தம் இன்மை என்று பாரதி குறிப்பிட்டுள்ளான்! நம் தேசத்திற்குஎதிரான நச்சுக் கருத்தை ஊட்டுகின்ற ஆங்கிலப் பத்திரிகைகளை ஆதரிக்காதீர்! உள்நாட்டுப் பொருள் என்று கூறிப் போலித்தனமாய் விற்கும் அயல்நாட்டுப் பொருளை வாங்காதே! என்று சுதேசிப் பொருளாதாரத்திற்கு எதிரான மூன்று நிலைப்பாடுகளைக் கடுமையாய்க் கண்டித்தான்!

சுதேசிப் பொருளாதாரப் பேரொளி வ.உ.சிக்கு சுதேசி நிறுவனத்தின் தேவையான இரண்டு லட்சம் ரூபாய் பணத்திற்குத் தானே பொதுமக்களிடம் வேண்டுகோள் வைக்கின்றான். "செல்வந்தர்கள் நிதி உதவி செய்யமாட்டார்கள். ஏழை, எளிய அடித்தளத்து மக்கள்தான் அந்த உதவியைச் செய்யவேண்டும்" என்றான்.

தேச உணர்வும் சமூக உணர்வும் அடித்தளத்து மக்களிடம் தான் உள்ளது என்பது பாரதியின் நம்பிக்கை. வேளாண்மைப் பொருளாதாரம் பற்றிச் சிந்தித்து உணவுப் பயிருக்கு மாற்றாய், பணப்பயிரைப் பயிர் செய்வதைக் கடுமையாய்க் கண்டிக்கின்றான்! நெல் பயிர்செய்ய வேண்டிய மண்ணில் மணிலாக் கொட்டையும் அவுரிப் பயிரும் பயிர் செய்தால் உணவுப் பஞ்சம்தான் ஏற்படும் என்று பாரதி, வேளாண்மை விஞ்ஞானியாகப் பேசுகின்றான்.

*நாடு செழிக்க வேணும்*
*நல்ல மழை பெய்ய வேணும்*
*நெல்லு விளைய வேணும்*
*ரெண்டு படி விற்க வேணும்!*

என்ற பாடலின் வரிகளில் உணவுப் பஞ்சம் நீங்க வேண்டும் என்ற உயிர்க்குல நேய விஞ்ஞானியைத் தரிசிக்க முடிகின்றது!

பாரதியின் காணமுடியாத பரிமாணத்தை சுதேசிப் பொருளாதார அடையாளத்தின் பரிணாம வளர்ச்சியை முழுமையாய் பாரதியின் உரைநடை வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது!

பாரதியின் பன்முகப் பரிணாமத்தினைத் தங்கள் பார்வைப் பரப்புக்கு ஏற்றவாறு பலரும் அடையாளப்படுத்துகின்றனர்! பாரதியை தேசியகவி என்று சிறப்புச் செய்கின்றனர்; தமிழ்க் கவிஞன் என்று பாராட்டுகின்றனர். ஆன்மிகக் கவிஞன் என்று ஆராதிக்கின்றனர். பொதுவுடைமைக் கவிஞன் என்று போற்றுகின்றனர். மக்கள் கவிஞன் என்று மலர்மாலை சூட்டுகின்றனர். எந்த அடையாளத்தைச் சூட்டினாலும் எந்த உயரத்தில் இருந்தாலும் சாதி, மத, இன எல்லைகளுக்கு அப்பால் பாரதி தனித்தும் உயர்ந்தும் விளங்குகின்றான்!

*"மனிதர் உணவை மனிதர் பறிக்கும் வழக்கம் இனி உண்டோ?*
*மனிதர் நோக மனிதர் பார்க்கும் வாழ்க்கை இனி உண்டோ?"*

என்ற வைர வரிகளுக்கு உரிய பாரதி, எல்லா எல்லைகளையும் தாண்டி உலக மனித நேயக்கவிஞன் என்ற சிம்மாசனத்தில் மகாகவிஞனாய் விளங்குகின்றான்!

மன்னை ப. அழகன்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 74. நாடு

மாந்தர்தம் வாழ்வியல் நாட்டில் நடைபெறுவதால் நாட்டின் இயல்புணர்த்தும் அதிகாரம்இது. நாடு என்று எடுத்துக்கொண்ட போதிலும் இயற்கை அமைவுகள் மட்டுமின்றி நாட்டில் வாழும் மக்களின் இயல்புகளும் எடுத்துக் கூறப்பெறுகின்றன. அரசர் மக்களின் தனித்தனி இயல்புகள் உணர்த்தியபின் நாட்டின் பொது இயல்புகளை எடுத்துக் கூறுகிறார்.

*தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்*
*செல்வரும் சேர்வது நாடு.* (731)

தப்பாமல் விளையும் நிலங்களும் அறவோரும் கேடில்லாத செல்வரும் ஒருங்கே சேர்வது நாடு.

எக்காலத்திலும் யாதானும் ஒரு விளைபொருளைப் பிழையின்றித் தரும் நிலம் "தள்ளா விளையுள்" என்றார். மற்றவர்களைத் தாழ்த்தி வரும் செல்வம் பழிக்கப்படும். சுரண்டப்படுவர் விழித்துக்கொள்ளும் பொழுது செல்வம் குறையும் என்பதனை விளக்கத் "தாழ்விலாச் செல்வர்" என்றார். செல்வம் ஈட்டலில் ஒருவருக்கு மேற்பட்டவர்கள் பங்கும் இருக்கிறது. ஈட்டிய செல்வம் பகிர்வில் துலாக்கோல் போல மற்றவர் வாழ்வு தாழாமல் சமநிலையில் இருத்தல் தாழ்விலாச் செல்வத்தின் தன்மை என்றும் பொருள் கொள்ளலாம்.

"தள்ளாவிளையுள்" என்றதால் பழுதுபடாமல் விளையத்தக்க நல்ல வளமான நிலம் என்றுணர்த்தியது.

*பெரும்பொருளான் பெட்டக்க தாகி அருங்கேட்டால்*
*ஆற்ற விளைவது நாடு.* (732)

அளவிறந்த பொருள்கள் விளைவதாகவும் பலராலும் விரும்பப் படுவதாகவும் கேடுகளால் பாதிப்பு ஏற்படாமல் விளைவதாகவும் விளங்குவதே நாடு.

விளையுளுக்கு வருங்கேடு; நிலத்தின் தன்மை, பயிர்நிலையில் வருங்கேடு, பூச்சிநோய் போன்றவை அறிவியல் சார்ந்த வேளாண்மைக் கருத்து இது.

*பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு*
*இறைஒருங்கு நேர்வது நாடு.* (733)

பொறுத்தற்கரிய பொறுப்புகள் வந்தாலும் அவற்றைத் தாங்கிக் கொண்டு அரசுக்குரிய வரியை ஒருமுகமாகத் தரும் இயல்புடைய குடிமக்களுடைய நாடே நாடு.

"பொறையொருங்கு மேல்வருங்கால்" என்பதை அரசுக்குரியதாக்கி, அரசுக்குப் பெரும் பொறுப்புக்கள் வரும்போது அவற்றைத் தாங்கமுடியாமல் அரசு நிலை தவறிவிட்டால் அரசுக்குரிய வரியைத் தவறாமல் விருப்பத்துடன் தரும் குடிமக்களுடைய நாடே நாடு என்றும் கூறலாம். இன்று நமது நாட்டில் வரி ஏய்ப்பும் பெருமைக்குரியதாக விளங்குகிறது.

*உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்*
*சேராது இயல்வது நாடு.* (734)

உறுத்தித் துன்பத்தைத் தரும் பசியும், நீங்காப் பிணியும் குடிமக்களிடையில் செறுத்தழிக்கும் பகையும் இல்லாதபடி அமைவதே நாடு. பசி, இடையறாது உறுத்தலின் "உறுபசி" என்றார்.

மருத்துவம் முதலியவற்றால் நீங்காத பிணியை "ஓவாப்பிணி" என்றார். தொழுநோயும் ஆஸ்துமாவும் குறிப்பிட்ட நோய்கள்.

குடிமக்கள் தங்களுக்குள் இணைந்து ஒற்றுமையாக வாழாது வன்கண்மையான நிலையில் பகைத்து வாழ்வார்களானால் நாட்டின் பொருள் உற்பத்தி பாதிக்கும். அரசின் காவற்பணிகளும் கூடும். ஆதலால் செறுபகையைத் தவிர்க்கும்படி கூறினார்.

*பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்துஅலைக்கும்*
*கொல்குறும்பும் இல்லது நாடு.* (735)

நாட்டில் பல குழுக்களும், பாழ் செய்யும் உட்பகையும் இவை காரணமாக ஆட்சிக்கு இடையூறு செய்யும் கொலைத் தன்மை மிக்க குறும்புடையவர்களும் இல்லாமல் அமைவது நாடு.

*கேடுஅறியாக் கெட்ட இடத்தும் வளம்குன்றா*
*நாடுஎன்ப நாட்டின் தலை.* (736)

எந்தவிதக் கேட்டினையும் அறியாததாய், ஒரோவழி கெட்டாலும் வளங்குன்றாததாய் உள்ள நாடே நாடுகளுக்குள் சிறந்தது என்பர்.

நாட்டிற்குக் கேடு, இயற்கை மாறுபாட்டால் வரும் அழிவுகள், வெள்ளத்தால் ஏற்படும் அழிவுகள், வறட்சியால் ஏற்படும் பாதிப்புகள் குறிப்பிடத்தக்கவை. இவற்றால் ஏற்பட்ட பாதிப்புக்களின் சுவடே தெரியாமல் மறுமுயற்சி செய்து வளத்தைப் படைக்கும் மக்கள் வாழும் நாடு என்பதறிக.

இரண்டாவது கேடு, பகைவரால் வரும் கேடு. பகைவர்களின் படையெடுப்பால் அழிவது. உழைப்புடைய மக்கள் வாழும் நாட்டில் அழிவை ஈடுகட்டி வளத்தைப் படைத்துவிடுவர்.

இரண்டாவது உலகப் பெரும்போரில் அழிந்த செருமனி வளர்ந்துள்ள நிலையை அறிக. இயற்கை முற்றிலும் ஒவ்வாத இசுரேல் நாட்டின் முன்னேற்றத்தை ஓர்க.

*இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்*
*வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு.* (737)

இருவகைப்பட்ட தண்ணீரும் வாய்த்த மலையும் ஊற்றுகளும் ஆறுகளும் வலிமையுடையதாகிய அரணும் நாட்டிற்கு உறுப்பு.

இருபுனல் - ஏரிகளின் நீர்ப்பரப்பும் நிலத்தடி நீருமாகும். "மலை" இயற்கை வளத்திற்குத் துணை செய்வது. "வாய்ந்தமலை" என்றார். மலை எப்படி வாய்த்திருந்தாலும் மலையைப் பசுமையாக வைத்திருப்பது மக்களின் பொறுப்பு.

வருபுனல் - மழைநீர்; மலைகளிலிருந்து வற்றாது வரும் ஆற்று நீர், ஊற்று நீர் ஆகியன வருபுனல்.

ஏரிகளில் நீரைப் பராமரிப்பதும் நிலத்தடி நீரைப் பராமரிப்பதும் இணைந்த பணி.

*பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்*
*அணிஎன்ப நாட்டிற்குஇவ் வைந்து.* (738)

பிணியின்மை , செல்வமுடைமை, நுகர்பொருளின் விளைவு அதனால் உளதாகும் மகிழ்வு, செல்வத்தைக் காக்கும் பணிக்குத் துணையாய்மையும் காவல் இவை ஐந்தும் நாட்டிற்கு அணிகளாகும்.

செல்வம் - பின்னே குறிப்பிடப்படும் விளைவுப் பொருள்களை நீக்கிய அனைத்துப் பொருள்களும் செல்வம் ஆகும்.

விளைவின்பம் - நுகர்பொருள்கள். அழியும் தன்மையினின்று விலகிய முத்து முதலியன செல்வங்கள். நுகர்பொருள்கள் விளைவு ஆகியன மிகுந்தாலும் சிறந்த காவல் இல்லாமல் போயின் பயனற்றுப் போகும் என்பதால் காவலையும் அணியெனச் சேர்த்துக் கூறினார்.

*நாடுஎன்ப நாடா வளத்தன நாடுஅல்ல*
*நாட வளந்தரு நாடு.* (739)

நாடு என்று சிறப்பித்துக் கூறப்பெறுவது மக்களின் முயற்சியின்றியே வளமுடையதாக இருப்பது. மக்களுடைய முயற்சியின் பயனாக வளம் தருவது நாடல்ல. "நாடா வளத்தன" என்றது "உழவர் உழாதன நான்கு பயனுடைத்து" என்பது போல இயற்கையாக அமைந்த வளம். இது நாடு தழுவிய நிலையில் அமைவது.

*ஆங்கமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே*
*வேந்தமை வில்லாத நாடு.* (740)

எல்லாவிதமான வளமும் வசதிகளும், அமைந்த நாடாயினும் நல்லரசு அமையாது போனால் பயனில்லை. "காவல்" இன்மையால் கெடும் என்பதால் வேந்தமைவு இல்லாத நாடு என்றார். ஆனால், மார்க்ஸ் "அரசு இல்லாத சமுதாயம் பொதுவுடைமைச் சமுதாயத்தின் இலக்கணம்" என்று கூறுகின்றார். ஒவ்வொருவரும் தன்னைத்தான் கொண்டொழுகின் காவல் எதற்கு?

*(தொடரும்)*

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# மகாகவி பாரதியார்

(செந்தமிழ்த்திலகம். **தேவகிமுத்தையா** எம்.ஏ.,எம்.ஃபில்.)
காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் 3.2.2007இல் ஆற்றிய உரை

## பண்பாடு

பாரதியார் தம் தாய் மொழியாம் தமிழிடம் கொண்ட பற்று அளவிட்டு உரைக்க முடியாததாகும். தீந்தமிழோடு வடமொழி, ஆங்கிலம், இந்துஸ்தானி முதலிய மொழிகளையும் கற்றுத் தெளிந்தவர். கற்றதன் பயனாகவே

*"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்*
*இனிதாவது எங்கும் காணோம்!"*

என்று பாடினார். அவர் பழந்தமிழ் இலக்கியங்கள் பலவற்றைப் பாங்குறப் பயின்று சுவைத்தவர். தமிழ் மொழியில் சிறந்த இலக்கியங்களைத் தோற்றுவித்து மறைந்த கவிஞர்களை அவர்கள் நூல்கள் வாயிலாகக் கண்டு உரையாடி மகிழ்ந்தவர். அதனால்தான்,

*"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்*
*வள்ளுவர்போல், இளங்கோவைப் போல்*
*பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;*
*உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை"*

என்று உறுதியுடன் உரைக்கின்றார்.

## பாரதியார் கண்ட தேச ஒற்றுமை

பாரத நாடு பன்மொழியைப் பேசும் பல்வகைப் பண்பாடுகளுடைய மக்கள் வாழும் ஒரு நிலப்பரப்பு ஆகும். பாரதியார் பாரத நாட்டு மக்களிடையே இணைந்து இருக்கும் ஒற்றுமைப் பண்பை அன்றே உலகுக்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

*"முப்பது கோடி முகமுடையாள் உயிர்*
*மொய்ம்புற வொன்றுடையாள் - இவள்*
*செப்புமொழி பதினெட்டுடையாள் எனிற்*
*சிந்தனை ஒன்றுடையாள்"*

என்று ஒற்றுமைத் தன்மையை உறுதிப்படுத்தி உரைக்கின்றார். இமயம் முதல் குமரி வரை வாழும் மாந்தர் அனைவரும் ஒரே சமுதாயம் என்பதை,

*"பாரத சமுதாயம் வாழ்கவே! - வாழ்க வாழ்க!*
*பாரத சமுதாயம் வாழ்கவே!"*

என்று வாழ்த்திப் பாடினார்.

பாரதியார், சமூகத்தில் பெண்டிரும் ஆடவரும் சரிநிகர் சமானமாக வாழவேண்டும் என்று கருதியவர். ஆகவே, பெண்ணினத்தின் பெருமையையும், கடமையையும் மிகத் தெளிவாகத் தம் பாடல்களில் விளக்கியுள்ளார்.

"புதுமைப்பெண், பெண்கள் வாழ்க, பெண்கள் விடுதலைக் கும்மி, பெண் விடுதலை" என்ற அவரது கவிதைப் பாடல்கள் பெண்கள் மட்டுமில்லாது, ஆடவரும் கற்றுக் களிப்புறக் கூடிய கருத்துக்கள் செறிந்தவையாகும். "நிமிர்ந்த நன்னடையும், நேர்கொண்ட பார்வையும் உடைய அப்புதுமைப்பெண் வாழ்க!" என்று வாழ்த்தி,

*"ஆண்களோடு பெண்களும்*
*சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே"*

என்று வாழும் வகையை விளக்குகின்றார்.

பாரதி அன்று கண்ட கனா வெகுவாகவே இன்று நனவாகியுள்ளது. என் கணவர் பேசும்பொழுது எனக்கு மட்டும் மரியாதை செய்யாமல் இச்சங்கம் அவரையும் மேடை ஏற்றிப் பேச வைத்திருக்கின்றது என்றும், என்னால் அவருக்கு மரியாதை கிடைத்திருக்கின்றது என்றும் கூறினார். உண்மை அதுவல்ல - அவரின் மனைவி என்பதால்தான் என்னைப் பேசவே அழைத்திருக்கிறார்கள் என்பதுதான் உண்மை. இருப்பினும், அவர் பேசியதைக் கேட்க பாரதி இருந்திருந்தால் ஒரு மனைவிக்கு ஒரு கணவர் தரும் பெருமையைக் கண்டு எத்தனை பூரித்திருப்பார்.

பெண்ணினத்தின் பெருமையை - பெற்ற தாய்க்குலத்தின் பெருமையை - பாரதியார் எந்நாளும் மறந்தவரல்லர். தொடக்கத்தில் தம் ஒவ்வொரு பாடல் முன்னரும்,

*"பெற்ற தாயும் பிறந்த பொன் னாடும்*
*நற்றவ வானினும் நனிசிறந் தனவே"*

என்ற அடிகளைச் சேர்த்தே வெளியிட்டு வந்தாராம். அவர், நாளும் "பெண்மை வாழ்க! பெண்மை வெல்க!" என்று கூறி மகிழ்ந்தவராவார். பாரதியாரின் பாடல்களில் என்றும் பொன்றாப் புகழுடன் விளங்கும் பாடல்கள் என்று ஏற்றுக் கொள்பவை "கண்ணன் பாட்டு", "பாஞ்சாலி சபதம்", "குயிற் பாட்டு" என்ற மூன்றும் ஆகும். இவை பாரதியார் பாடல்களுள் மும்மணிகள் ஆகும். அப்பாடல்களின் உள்ளே புகுவதற்கு வியூகம் அமைத்து விடலாம். ஆனால் வெளிவே வருவதற்கு இயலாது தத்தளிக்க நேரிடும். அவ்வளவு சுவைக்களம் நிரம்பியவை. ஆகவே உள்ளே புகும் முயற்சியை மேற்கொள்ளவில்லை.

பாரதி, தமிழ் மொழிக்கும், தமிழ் மக்களுக்கும் புத்துணர்ச்சி ஊட்டிய புதுமைக் கவிஞர். தற்காலக் கவிஞர்களுக்கெல்லாம் வழிகாட்டி. எளிய சொற்கள் - எளிய நடை - எளிதில் புரிந்துகொள்ளும் ஓசைநயம் அமைந்த இனிய பாட்டுக்களையே பாடவேண்டும் என்பதற்குப் பாதையமைத்துக் கொடுத்தவர் பாரதியார்.

உணர்ச்சியூட்டும் உன்னதக் கவிதைகள் படைத்தவர் பாரதியார். அவருடைய கவிதைகள் எழுச்சியும் உணர்ச்சியும் ஊட்டுவன; நாடி, நரம்புகளுக்கு முறுக்கேற்றி வீர உணர்வைத் தரவல்லன; பாமர மக்களும் பாட்டைக் கேட்டபின் வீறு கொள்வர்; விழிப்புணர்ச்சி பெற்றுத் தடந்தோள் தட்டுவர்; பகையொழிக்கப் புறப்படுவர்.

*"படித்தறியா மிகஏழைக் கிழவனேனும்*
*பாரதியின் பாட்டிசைக்கக் கேட்பானாகில்*
*துடித்தெழுந்து தன் மெலிந்த தோளைக் கொட்டித்*
*துளை மிகுந்த கந்தலுடை சுருக்கிக் கட்டி*
*எடுத்தெறிய வேண்டுமிந்த அடிமை வாழ்வை*
*இப்பொழுதே இக்கணமே என்றார்த் திங்கு*
*அடித்து உரைத்தே ஆவேசம் கொள்வா னென்றால்*
*அப்பாட்டின் பெருமை சொல யாரே வல்லார்!"*

என்ற நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அவர்கள் பாடல், பாரதியார் பாடலின் பெருமையை இனிது உணர்த்தும்.

உலகத் தோற்றமும், படைப்பின் மாட்சியும், இயற்கையின் அளவற்ற கூறுகளும், அவற்றின் இடைவிடா இயக்கமும், அவருடைய பாடல்களுக்குக் கருப்பொருள்களாக, பாடுபொருளாக, அமைந்தன.

இவர் தொண்டுகள் பல திறத்தன. நாட்டிற்கும், மொழிக்கும், பெண் சமூகத்திற்கும், சமுதாயப் பொதுமைக்கும் இவர் ஆற்றியப் பணிகள் அளவிடற்கரியன. வறுமையிற் செம்மை கண்டவர். எந்தச் சூழ்நிலையிலும் நாட்டு விடுதலைக்குப் பாடுபடும் நல்ல குறிக்கோளினை மறவாதவர்; கை விடாதவர். குறிக்கோள் நிறைந்த பிறருக்குப் பயன் அளிக்கும் வாழ்க்கை வாழ்ந்தவர்.

பாரதியார் ஒரு பல்துறை வல்லுநர் என்பது முடிவு. நாட்டுப் பற்றுடன் பாடிய விடுதலைப் பாடல்கள்; இறையுணர்வுடன் பாடிய தோத்திரப் பாடல்கள்; பல்சுவைப் பாடல்கள்; முப்பெரும் பாடல்கள்; (குயில் பாட்டு, கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம்) வசன கவிதை என ஐவகையாக அவருடைய கவிதைகள் பாகுபடுத்தப்பட்டுள்ளன. பல்வேறு தலைப்புகளில் கட்டுரைகள் பல தீட்டியுள்ளார். பாரதியார் ஒரு சிறந்த கதாசிரியர்; ஏறக்குறைய ஐம்பது கதைகள் எழுதியுள்ளார்.

வாழ்க்கையில் பல்வேறு இன்னல்களுக்கிடையில் தம்முடைய எழுத்துப் பணியை மிக மிக விரிந்த அளவில் அவர் செய்துள்ளமை பாராட்டி, வியந்து போற்றுதற்குரியதாகும்.

மனிதப் பண்புகளில் தலைசிறந்ததாகப் போற்றப்பெறும் உள்ளத் தூய்மையால் பெறக்கூடியன எவை என்பதைப் பாரதியார் பாடல் கொண்டு தெளியலாம்;

*"உள்ளத்தில் உண்மையொளி யுண்டாயின்*
*வாக்கினிலே ஒளியுண்டாகும்;*
*வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்*
*கவிப்பெருக்கும் மேவுமாயின்*
*பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம்*
*விழிபெற்றுப் பதவி கொள்வர்*
*தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்*
*இங்கு அமரர் சிறப்புக் கண்டார்!"*

இத்தகைய உயர்ந்த கவிஞராகிய பாரதியாரை "அமரகவி" எனப் போற்றலாமல்லவா? இந்த சொற்பொழிவிற்காக உரையினை தயார் செய்து கொண்டிருந்தபோது, எனக்குள் ஒரு கேள்வி எழுந்தது. ஏசுநாதர் மற்றும் ஆதிசங்கரர் போல் பாரதியாரும் 39 ஆண்டுகள்தான் வாழ்ந்தார். இன்னும் அவர் அதிக காலம் வாழ்ந்திருந்தால் நமக்கும், பாட்டுக்கும் நலமாக இருந்திருக்குமே என்று எண்ணினேன்.

மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழா மலரில் (1982) 272ம் பக்கத்தில் உள்ள பாரதியாரின் கூற்று என் பார்வையில் பட்டது. அதில் பாரதியார் - "நான் தீராத இளமை சார்ந்தேன். என்றும், எப்போதும், நித்யமான கால முழுமையிலும், தீராத, மாறாத இளமையுடையேன். மூட மனிதர் தீர்க்காயுள் வேண்டுகின்றனர். நான் அதனை வேண்டேன். ஏனென்றால், இவர்களெய்தும் நீண்ட வயது துன்பமாகிறதேயன்றி வேறில்லை. நான் ஸதா காலம் துன்பமின்றி வாழும் வாழ்க்கையை விரும்புகின்றேன். அதனை நான் எய்திவிட்டேன். தீராத கவலை பொதிந்த சாதாரண மனித வாழ்க்கை சற்று நீடிப்பினால் என்ன பயன் தரும்? நான் கவலையை ஒழித்தேன், ஆதலால் எப்போதும் வாழ்வேன், ஆதலால் கவலையை விட்டேன். கவலையாலும், பயத்தாலும் மரணமுண்டாகிறது. கவலையும் பயமும் பகைவர். நான் இப்பகைவரை வென்று தீர்த்தேன். ஆதலால் மரணத்தை வென்றேன். நான் அமரன்" என்று குறிப்பிடுகின்றார். இதே எண்ணத்தை நம் நாட்டுக்கோட்டைக் கவி ஒருவர் "நான் நிரந்தரமானவன். அழிவதில்லை. எந்த நிலையிலும் எனக்கு மரணம் இல்லை"யென்று பாடியிருப்பது எனக்கு நினைவில்

வந்தது. இறக்கும் மனிதனின் இறவாப் பாடல்கள் இவை என்பதனை உணர்ந்தேன்.

இக்காலத்தில் பெரிதாகச் சொல்லப்படும் பொதுவுடைமைத் தத்துவத்தை (Sosalism) அன்றே முழங்கியவர் பாரதி. மக்கள் மட்டுமன்றிக் காக்கையும், குருவியும், நீள்கடலும், மலையும் தம் கூட்டமாக உறவாகக் கொண்டவர் பாரதி. இந்திய மக்கள் அனைவரும் ஒற்றுமையாக வாழவேண்டியதன் அவசியத்தை,

*"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே - நம்மில்*
*ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே"*

என வற்புறுத்தியவர். நனவாக வேண்டிய கனவுகள் பலவற்றை நமக்கு உணர்த்தியவர். குழந்தைகளுக்கு நல்ல அறிவுரைகள் வழங்கியவர்.

"ஓராயிரம் ஆண்டு ஓய்ந்திருந்த தமிழ் நாட்டில் வாராது போல வந்த மாமணி" என்று வேறு ஒருவரைப் பற்றிக் கூறிய கூற்றிற்குப் பாரதியாரே எடுத்துக்காட்டாய்த் திகழ்கின்றார். தமிழ் இலக்கிய வானில் என்றும் சுடர் விடும் பேரொளி பாரதி!

*"வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்*
*வாழிய பாரத மணித்திரு நாடு!"*

என்று உளமார வாழ்த்திய உத்தமப்புலவராம் பாரதியார் புகழை என்றும் நிலை நிறுத்துவோமாக!

**கா.சு. பிள்ளை** அவர்களின் நூல்களை
நாட்டுடைமையாக்கிய மாண்புமிகு தமிழக முதல்வர் **கலைஞர்**
அவர்களுக்கு நன்றி!

"பேராசிரியர்" "நுண்மாண் நுழைபுலச்செல்வம்" "பல்கலைச் செல்வர்" "தாகூர் சட்ட விரிவுரையாளர்" எனப்பல்வேறு சிறப்புகள் பெற்றுத் தாம்பிறந்த திருநெல்வேலிக்குப் பெருமை தேடித்தந்த அரும்பெறல் தமிழறிஞர் திருமிகு **கா. சுப்பிரமணியபிள்ளை** (காசுபிள்ளை) அவர்களின் அரிய படைப்புகள் தமிழ்கூறு நல்லுலகிலும், தமிழர் கைகளிலும் தவழும் வகையில் அன்னாரது படைப்புகளை நாட்டுடைமையாக்கி ஆணை பிறப்பித்த மாண்புமிகு தமிழக முதலமைச்சர் திருவாளர். **மு. கருணாநிதி** அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியை அவிருக்கும் திசை நோக்கிச் செலுத்துகின்றேன்.

-கவிஞர் **மு.சு. சங்கர்,** திருநெல்வேலி.

# தாய்த்தமிழைச் சேய்கள் மறந்ததேன்

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

தமிழ்கூட மண்மீதில் இழைத்து விட்ட
　　தவறொன்றும் உண்டென்றார் அறிஞர் அண்ணா!
"தமிழ்செய்த தவறென்ன?" என்றால் அஃது
　　தமிழனுக்குத் தாய்மொழியாய் வாய்த்த தொன்றே!
அமிழ்தனைய இலக்கியங்கள் குலுங்கி நிற்கும்
　　அழகுதமிழ் இந்நேரம் ஐரோப் பாவில்
அமைந்துள்ள ஒருநாட்டில் பிறந்தி ருந்தால்
　　அகிலமொழி எனஓங்கி இருக்கும்! என்றார்!

வாய்மொழியாய்த் தாய்மொழியைப் பேசு தற்கும்
　　வக்கில்லாத் தமிழ்நண்பா! ஒன்று கேட்பேன்;
சேய்களெல்லாம் தாய்த்தமிழை மறந்தே பாழும்
　　தேம்சுமொழி ஆங்கிலத்தில் பேசல் ஏன்? ஏன்?
போய்அவரைக் "கான்வெண்டி"ல் சேர்த்து விட்டுப்
　　புலம்புவதும் நடிப்பலவா? சுரைவி தைத்தால்
காய்வேறு காய்த்திடுமா? தமிழா! உன்றன்
　　காதையதன் பாதையினை மாற்றுவாயா?

உலகமதில் "சப்பா"னும் "செருமன்" நாடும்
　　ஒப்பரிய முன்னேற்றம் காண்ப தேன்? ஏன்?
துலங்குகின்ற தாய்மொழியின் வழியில் கல்வி
　　தொடக்கமுதல் இறுதிவரை கற்ப தால்தான்!
பலஆண்டும் முன்னாலே கடையைக் கட்டிப்
　　பறங்கியனோ போய்விட்டான்; எனினும் அன்னோன்
விலங்கு மொழித் தளையுள்ளே வீழ்ந்து மாய்தல்
　　வெட்கமென்றே கணமேனும் சிந்தித் தாயா?

# புலவரின் வேண்டுகோளும் அறிஞரின் விளக்கமும்

அன்புடையீர்,

பங்குனி - மார்ச் 2007 "மக்கள் சிந்தனை" டாக்டர் இரா. கலைக்கோவன் கட்டுரையில் கீழ்க்கண்ட பொருள்விளங்கா வடமொழித் தொடர்கள் உள்ளன.

உபவீதம், பார்சுவம், கடியவலம்பிதம், சரப்பளி, கரண்டமகுடர், ஆகூயபரதமுத்திரை, சமபாதர், திரயச்ரம், பூதநாயகர், அர்த்தஸ்வஸ்திசம், தர்ஜனி, அர்த்தரேசிதமாய், அக்ரதல சஞ்சாரம், ஸ்வதிகப்பாதநிலை.

தெய்வத்திரு மாமுனிவர் தமிழ் எப்படி இருக்க வேண்டும் என விரும்பினாரோ அதற்கு முரண்பாடாக இத்தொடர்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. தமிழ் மரபில் தோன்றிய கட்டுரையாளர்க்கும் இவற்றிற்குரிய தமிழ்த் தொடர்கள் பயன்படுத்தல் ஒன்றும் அரிதில்லை. மக்கள் சிந்தனையும் இத்தொடர்கட்கு அடிக்குறிப்பு தந்திருக்கலாம். என்னைப் போலத் தமிழ் படித்தோருக்கே இவை புரியவில்லை. இனிவரும் கட்டுரைகளிலேனும் நல்லதமிழ் நடமாடட்டும். அடிகளாரின் அருள்ஒளி துணை நிற்க.

நல்லாசிரியர், புலவர், சிவபூசகர். **ம.மணி** எம்.ஏ.எம்.எட்.,
ஜோதிடர்,
உடையார்பாளையம்

அன்புடையீர் வணக்கம். புலவர் திரு. ம. மணி எழுதியுள்ள அஞ்சலட்டை கண்டேன். கட்டுரையைப் படித்து அதில் பயன்படுத்தப்பட்டுள்ள வடசொற்களுக்குப் பொருள் கேட்டுள்ளார்.

| | | |
|---|---|---|
| உபவீதம் | - | முப்புரிநூலை இடமிருந்து வலமாக அணியும் அமைப்பு |
| பார்சுவம் | - | அடியை (பாதம்) முழுவதுமாய்ப் பக்கவாட்டில் திருப்பியிருத்தல் |
| கடியவலம்பிதம் | - | உள்ளங்கைப் பகுதி தொடையின் பக்கவாட்டில் இருக்குமாறு விரல்களைத் தொடையில் அழுத்தமாக இருத்தும் கையமைப்பு. |
| சரப்பளி | - | இது ஒரு வகை கழுத்தணி. அடைவாக அணியப்படும். |
| கரண்டமகுடம் | - | தலையணிகளில் ஒன்று. அடுக்கடுக்காய் இரண்டு, மூன்று அடுக்குகள் அமைத்துத் தலைமுடியைப் புனைதல். |
| ஆகூயவரதம் | - | அழைத்து அருள் வழங்குதலைக் காட்டும் கையமைதி. |
| சமபாதம் | - | இரண்டு அடிகளும் ஒன்றையொன்று ஒட்டியிருக்குமாறு இருத்தி நிற்றல். |
| திரயச்ரம் | - | அடி அமைதிகளில் ஒன்று. அடியைக் கோணத் திசையில் நிறுத்துதல். |

| | | |
|---|---|---|
| பூதநாயகர் | - | பூதங்களின் தலைவன் |
| அர்த்தஸ்வஸ்திகம் | - | 108 ஆடல் கரணங்களில் ஒன்று. பரதரின் நாட்டிய நூலில் இதன் வரையறை கூறப்பட்டுள்ளது. |
| தர்ஜனி | - | சுட்டு விரலை மட்டும் உயர்த்தி எச்சரிக்கை செய்யும் கையமைதி. |
| அர்த்தரேசிதம் | - | ஆடலுக்குப் பயன்படுத்தப்படும் அழகுக் கையமைதிகளில் ஒன்று. ஒரு கை மட்டும் மேலே உயர்த்தப்பட்டு மணிக்கட்டுத் தாழவிடப்படும் நிலை. |
| அக்ரதலசஞ்சாரம் | - | விரல்களால் மட்டும் தரையைத் தொட்டபடி, அடியின் ஏனைய பகுதிகளைத் தரையளவிலிருந்து உயர்த்தி நிற்றல். |
| ஸ்வஸ்திகப்பாதநிலை | - | இரண்டு அடிகளும் ஒன்றையொன்று குறுக்கீடு செய்து அமைதல். இதுவும் ஆடலுக்கான அடி அமைதிகளில் ஒன்று. |

சிற்பக்கலை, ஆடற்கலை, இசைக்கலை, கோயிற் கட்டடக்கலை இவற்றில் அனைத்து நூல்களும் வடமொழியில்தான் உள்ளன. இத்துறைகள் சார்ந்த கலைச்சொற்களை எங்களால் இயன்ற அளவு தமிழ்ப்படுத்தியே கட்டுரைகளில் தருகிறோம். எனினும், பெரும்பான்மையான கலைச் சொற்களைப் பொருள் நலம் குன்றாமல், சொற்சுருக்கமாய் மொழியாக்கம் செய்வது எளிதானதாக இல்லை.

புலவர் திரு. ம. மணியின் முகவரிப் பதிவிலேயே பூசகர், ஜோதிடர் எனும் வடசொற்கள் உள்ளமை காண்க.

கோயிற்கலைக் கட்டுரைகளை முழுமையாகப் புரிந்துகொள்ள அக்கலைகளில் சற்றேனும் தெளிவு இருத்தல் இன்றியமையாதது. அனைத்துத் தள மக்களும் புரிந்துகொள்ளுமாறு கோயிற்கலைக் கட்டுரைகளை எழுதுதல் இயலக்கூடியதே. ஆனால், அது ஆய்வுப் பதிவாக அமையாது. எங்கள் கட்டுரை, திருமடம் சார்ந்த குன்றக்குடிக் குடைவரைகள் பற்றிய முழுமையான ஆய்வுப் பதிவு. தமிழாட்சியுள்ள கட்டுரையாகவே இயன்றவரை எழுதி வருகிறோம். தவிர்க்கமுடியாத இடங்களில் கலைச்சொற்கள் வடசொற்களாக வருமானால் பொறுத்தருள்க. "மக்கள் சிந்தனை" இடமளிக்குமானால் கட்டுரை முடியும்போது அனைத்து வடசொற்களுக்கும் உரிய விளக்கங்களைப் பின்னிணைப்பாகத் தந்துவிடலாம்.

கல்வெட்டு, கோயிற்கலைகளிலிருந்து முற்றிலுமாய் விலகி நிற்கும் தமிழறிஞர்கள், தமிழ் செம்மொழியாக அறிவிக்கப்பட்டிருக்கும் இந்தக் காலகட்டத்திலாவது, இத்துறைகளில் ஈடுபாடு செலுத்தி, தகுதிசான்ற கலைச்சொற்களின் உருவாக்கத்திற்கும் மொழியாக்கத்திற்கும் உதவினால் தமிழும் வளம் பெறும்; கோயிற்கலைக் கட்டுரைகளும் எளிமைப்படும்.

அன்புடன்

**இரா. கலைக்கோவன்**

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# குன்றக்குடிக் குடைவரைகளும் கல்வெட்டுகளும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்)

## கல்வெட்டுகள்

மூன்றாம் குடைவரையில் நான்கு கல்வெட்டுகளே உள்ளன. இவற்றுள் ஒன்று முதலாம் இராஜராஜருடையது. மற்றொன்று முதலாம் இராஜேந்திரருடையது. ஏனைய இரண்டும் சுந்தர பாண்டியருடையவை. இக்குடைவரையின் பெருமண்டபச் சுவர்களில் ஐந்து கல்வெட்டுகள் உள்ளன. இவ்வொன்பது கல்வெட்டுகளின் சாரத்தையும் கல்வெட்டுகளின் பார்வையில் குன்றக்குடி என்ற தலைப்பின் கீழ்ப் பார்க்கலாம்.

## மூன்றாம் குடைவரையை அடுத்துள்ள பாறைச்சரிவு

வெளிப்பெருமண்டபத்திற்கு வெளியே, மூன்றாம் குடைவரையைத் தொடர்ந்து அமைந்துள்ள மலைச்சரிவில் கோட்டம் செய்து சண்டேசுவரரைப் பொளிந்துள்ளனர். இச்சிற்பத்திற்கு முன்னால் சிறுமண்டபமொன்றும் கட்டப்பட்டுள்ளது. அர்த்தபத்மாசனத்தில் உள்ள சண்டேசுவரர் இரண்டு கைகளையும் தொடைகளின் மீது இருத்தியுள்ளார். இவற்றுள் வலக்கைக் கடகத்தில் உள்ளது. பட்டையான முப்புரிநூல், பூட்டுக்குண்டலங்கள், கண்டிகை, சடைப்பாரம் எனக் காட்சிதரும் சண்டேசுவரரின் வலப்புறத்தே மழுவொன்று வடிவமைக்கப்பட்டுள்ளது.

சண்டேசுவரர் திருமுன்னுக்கு முன்னாலுள்ள திறந்த வெளியிலிருந்து பெருமண்டபக் கிழக்குச் சுவரின் மேற்பகுதியைக் காணலாம். உத்திரத்தில் முடியும் இச்சுவரின் சில பகுதிகள் இலேசாய்ச் சிதைந்துள்ளன. உத்திரத்தின் மேல் வலபியும் அதையொட்டிக் கூடுகளுடனான கபோதமும் அழகற்ற நிலையில் காட்டப்பட்டுள்ளன. இக்கபோதத்தின் மேல், முதல் தள முடிவைக் காட்டும் வகையில் பூமிதேசமாக யாளி வரிமானம் தொடர்கிறது.

## சண்முகநாதப் பெருமான் கோயில்

குடைவரைகள் உருவாக்கப்பட்டுள்ள மலையின் மேல், பிற்பாண்டியர் கால முருகன் கோயிலொன்று அமைந்துள்ளது. இக்கோயிலுக்கு அழைத்துச் செல்லும் மலைப்பாதையிலுள்ள சிறு மண்டபமொன்றின் கூரையில் நாயக்கர் கால ஓவியங்கள் கதை விளக்கத்துடன் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன.

கோபுர வாயிலுடன் அமைந்துள்ள சண்முகநாதப் பெருமான் விமானம் ஒருதளத் திராவிடமாகும். இறைவன் வீற்றிருக்கும் கருவறையின் முன் முகமண்டபமும் இடைநாழிகையும் உள்ளன. விமானச் சுவர்களில் பிற்பாண்டியர் காலக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

## ஞானியார் மடம்

முருகன் கோயிலுக்குப் பின்புறத்தே, மலைப்பகுதியிலுள்ள குகைத் தளம் ஞானியார் மடம் என்றழைக்கப்படுகிறது. இதை அடையக் குடைவரைகளைக் கடந்து திருக்குளத்தின் கரை வழியே மேலேறிச் செல்லவேண்டும். வழியெல்லாம் மலைமீதுகூடக் குடியிருப்புகள். மலைப்பாறையிலுள்ள இயற்கையான குகைத் தளத்தில் ஏழு படுக்கைகள் அடுத்தடுத்த நிலையில் வெட்டப்பட்டுள்ளன.[46] நன்கு சமன் செய்து வழவழப்பாக்கப்பட்டுள்ள இப்படுக்கைகளுள் இரண்டிற்குச் சற்று உயரமான தலையணை அமைப்பும் உள்ளது. ஒரு படுக்கைக்கு உயரம் குறைந்த தலையணை அமைப்புக் காணப்படுகிறது.

இக்குகைகத்தளத்தின் கூரைச்சரிவின் முகப்பில் வலப்புறம் ஒரு கல்வெட்டும் இடப்புறம் ஒரு கல்வெட்டும் பழந்தமிழ் எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளன. இடப்புறக் கல்வெட்டு இக்குகைத் தளத்தையொட்டிக் கட்டப்பட்டுள்ள கருங்கல் கட்டமைப்பில் தன் தொடர்ச்சியை இழந்துள்ளது. இக்குகைத்தளத்திற்கு அருகிலுள்ள கபோதபந்தத் தாங்குதள மேடைமீது ஆஞ்சநேயர், நாகர், பிள்ளையார் சிற்பங்களும் இங்கு வழிபாட்டில் உள்ளன. சற்றுத் தள்ளி பத்மாசனத்தில் ஒரு முனிவர் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. ஆண்டுதோறும் இங்கு விழா எடுக்கப்படுவதாக ஊரார் கூறுகின்றனர்.

## கல்வெட்டுகளின் பார்வையில் குன்றக்குடி

குன்றக்குடி மலையிலுள்ள குகைத்தளம், குடைவரைகள், கற்றளிகள் இவற்றிலிருந்து படியெடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளின் எண்ணிக்கை ஐம்பத்தொன்றாகும்.[47] இவற்றுள் நாற்பத்தாறு கல்வெட்டுகள் நடுவண் அரசின் கல்வெட்டுத்துறையால் ஐந்து நிலைகளிலும்[48] எஞ்சிய ஐந்து கல்வெட்டுகள் டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையக் களஆய்வுகளின்போதும் படியெடுக்கப்பட்டன[49].

இவற்றுள் முப்பது கல்வெட்டுகள் குடைவரைகளில் இடம் பெற்றுள்ளன. குடைவரை சார்ந்த மண்டபச் சுவர்களில் எட்டுக் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. வெளி மண்டபத்திலுள்ள தேனாற்றுநாதர் திருமுன்னில் நான்கு கல்வெட்டுகளும் அதையடுத்துள்ள அறையின் உட்புறச் சுவர்களில் மூன்று கல்வெட்டுகளும் மலைமேல்

உள்ள முருகன் திருக்கோயிலில் நான்கு கல்வெட்டுகளும் குன்றக்குடி மலையிலுள்ள இயற்கையான குகைத்தளத்தின் முகப்பில் பழந்தமிழ்க் கல்வெட்டுகள் இரண்டும் காணப்படுகின்றன.

காப்பியூர் ஆதன் சாத்தனைச் சுட்டும் பழந்தமிழ்க் கல்வெட்டின் காலத்தைக் கி.பி. மூன்றாம் நூற்றாண்டாகக் குறிப்பிடும் ஐராவதம் மகாதேவன், கட்டமைப்பில் சிக்கியுள்ள மற்றொரு பழந்தமிழ்க் கல்வெட்டை "ஊறுது" எனப் படித்து, "ஊருணி" எனப் பொருள் கொண்டுள்ளமையுடன் அதன் காலத்தையும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டாகக் குறிப்பிட்டுள்ளார்.[50] இவ்விரண்டு கல்வெட்டுகளும் தனித்தனியே வெட்டப்பட்டிருக்கும் நிலையிலும் இவை ஒன்றோடொன்று தொடர்புடைய ஒரே கல்வெட்டின் இரண்டு பகுதிகளாகலாம் என்பது அவர் கருத்தாக உள்ளது. நடுக் குடைவரைத் தூணொன்றில் இருவரிகளில் பொறிக்கப்பட்டுள்ள கி.பி. எட்டாம் நூற்றாண்டினதாகக் கொள்ளத்தக்க வட்டெழுத்துக் கல்வெட்டு இக்குடைவரையை மசிலீச்சுரம் என்கிறது.[51]

பழந்தமிழ், வட்டெழுத்துக் கல்வெட்டுகளைத் தவிர்த்துவிட்டால் இங்குள்ள ஏனைய கல்வெட்டுகளுள் காலத்தால் பழைமையானது முதலாம் இராஜராஜரின் இருபத்து மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டேயாகும். இவரது மகனார் முதலாம் இராஜேந்திரரின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் இங்குள்ளது. இவ்விரண்டும் ஒரே குடைவரையில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

பிற சோழ வேந்தர்களுள் முதலாம் குலோத்துங்கரின் கல்வெட்டுகள் மட்டுமே இங்குக் காணப்படுகின்றன. இவை இவ்வேந்தரின் இருபத்திரண்டாம் ஆட்சியாண்டிலிருந்து நாற்பத்தொன்பதாம் ஆட்சியாண்டுவரை பரவியுள்ளன. இவற்றுள் ஆறு கல்வெட்டுகள் முதற் குடைவரையிலும் ஒரு கல்வெட்டு நடுக் குடைவரையிலுமாய் இடம்பெற்றுள்ளன.

சோணாடு வழங்கியருளிய மாறவர்மர் சுந்தரபாண்டியர், சடையவர்மர் ஸ்ரீவல்லபதேவர்[52], விக்கிரமபாண்டியர், மாறவர்மர் குலசேகரபாண்டியர் கல்வெட்டுகள் மிகுதியாக உள்ளன. இவற்றுள் சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டியரின் கல்வெட்டுகள் பன்னிரண்டு ஆகும். இம்மன்னரின் மூன்றாம் ஆட்சியாண்டிலிருந்து பதினெட்டாம் ஆட்சியாண்டுவரை பரவியுள்ள இக்கல்வெட்டுகள் முருகன் கோயில் தவிர கல்வெட்டுகள் காணப்படும் ஏனைய அனைத்து இடங்களிலுமாய்ப் பொறிக்கப்பட்டுள்ளன. மன்னர் பெயரற்ற கல்வெட்டுகள் பதினான்கு உள்ளன.

இங்குள்ள மூன்று குடைவரைகளில், எட்டாம் நூற்றாண்டளவிலேயே பெயரிடப்பட்டிருப்பது நடுக்குடைவரைதான். மூன்றாம் குடைவரையில் காணப்படும் முதலாம் இராஜராஜர், முதலாம் இராஜேந்திரர் கல்வெட்டுகள் இங்குள்ள இறைவனைக் குன்றக்குடிப் பரமசாமி என்றழைக்கின்றன. முதலாம் குலோத்துங்கரின் ஏழு கல்வெட்டுகளுள் நான்கு, திருக்குன்றக்குடித் திருமலை உடைய மகாதேவர் என்றும் இரண்டு, திருமலை உடைய நாயனார் என்றும் இறைவன் பெயரைக் குறிக்கின்றன.

இக்கல்வெட்டுகளுள் ஐந்து முதற்குடைவரையில் உள்ளன. ஒன்று நடுக் குடைவரையில் உள்ளது. எனவே இக்கல்வெட்டுகள் குறிக்கும் பெயர்கள் இங்குள்ள மூன்று குடைவரை இறைவர்க்கும் பொதுவானவையாக இருந்தனவோ என்று கருதவேண்டியுள்ளது. பிற்காலக் கல்வெட்டுகளிலும் இது போலவே தேனாற்றுநாயகரென்றும் மலைக்கொழுந்து நாயனாரென்றும் பொதுப் பெயரிட்டு அழைக்கும் முறையைப் பார்க்கிறோம். முதற் குடைவரையிலுள்ள சடையவர்மர் ஸ்ரீவல்லபதேவரின் இரண்டு கல்வெட்டுகளும் இங்குள்ள இறைவனை ஸ்ரீ முலஸ்தானம் உடைய நாயனார் என்று குறிப்பிடுகின்றன.

(தொடரும்)

## தமிழக அரசின் வரவு-செலவுத் திட்டத்திற்கு வரவேற்பு

*தமிழக அரசின் நிதிநிலைத் திட்டத்தில் சிங்காரவேலர், வாரியார் சுவாமிகள், தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார், கி.வா.ஜகநாதன், எஸ்.எஸ். தென்னரசு, அ.ச. ஞானசம்பந்தம், சாவி, நா. பார்த்தசாரதி உள்ளிட்ட இன்னும் பல தமிழ்ச் சான்றோர்களின், அறிஞர்களின் நூல்களை நாட்டுடைமை யாக்கியதாக அறிவித்திருப்பதும் தொடர்ந்து தக்க தமிழ் அறிஞர்களின் நூல்களின் நாட்டுடைமையாக்கப்படும் என அறிவித்திருப்பதும் மிகுந்த பாராட்டுக்கும், மகிழ்ச்சிக்கும் உரியது. எப்பொழுதும் அறிஞர்களை, சான்றோர்களைப் போற்றுவதில், பாராட்டுவதில் முத்தமிழறிஞர் மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் தன்னிகரற்று விளங்குகின்றார் என்பதை இது காட்டுகின்றது.*

*கல்வி, மருத்துவம், வேலைவாய்ப்பு சமுதாயச் சீர்திருத்தம் போன்றவற்றிற்கு முக்கியத்துவம் அளித்தும் 48 திருக்கோயில்களுக்குக் குடமுழுக்குச் செய்வதற்குத் திட்டமிட்டும் இருப்பது வரவேற்புக்கும் பாராட்டுக்கும் உரியது.*

***- பொன்னம்பல அடிகளார்***

# உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாடு

உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கம், மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையுடன் இணைந்து பத்தாவது உலக மாநாட்டை மலேசிய நாட்டுத் தலைநகரான கோலாலம்பூரில் வரும் 2007 ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 20,21,22 வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய நாள்களில் நடத்துகிறது.

ஆர்வமுள்ள கட்டுரையாளர்கள், இம்மாநாட்டிற்குத் தம் ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி அனுப்பலாம்.

| | | |
|---|---|---|
| பொதுத் தலைப்பு | : | ***உலகத் தமிழர்களின் நிலை*** |
| சிறப்புத் தலைப்பு | : | ***புலம்பெயர்ந்த தமிழர்களின் நிலை - அன்று முதல் இன்றுவரை*** |
| பக்க அளவு | : | ஐந்து பக்கம் முதல் பதினைந்து பக்கங்கள் வரை |
| அளவு | : | டெம்மி 1/8 (அகலம் 110 மி.மீ. உயரம் 178 மி.மீ) |

*கட்டுரையாளர்கள் தம் கட்டுரைகளை விடுக்க வேண்டிய முகவரி :*

**க.ப. அறவாணன்**

இந்திய ஒருங்கிணைப்பாளர்

தமிழ்க்கோட்டம், 2 முனிரத்தினம் தெரு, அய்யாவு குடியிருப்பு,
அமைந்தகரை, சென்னை - 600 029, தொ.பே. 044-2374 4568

*கட்டுரை வந்து சேரவேண்டிய நிறைவு நாள் :* மே 15, 2007

*கட்டுரையைக் கணினி அச்சிட வேண்டிய முறை :*

கட்டுரையைக் கணினி வழி அச்சிட்டு அதற்குரிய எழுத்தையும் (Font) பதிவு செய்து சி.டியுடன் விடுத்தல் வேண்டும். கூடியவரை ஸ்ரீலிபி (Shree Lipi) எழுத்தில் கணினி அச்சு செய்தல் நல்லது. கணினி அச்சில் கட்டுரையின் ஒரு படியையும் கட்டாயம் இணைத்தல் வேண்டும். கையெழுத்துப்படி ஏற்கப்பெறாது.

கட்டுரை, மாநாட்டுத் தலைப்பை ஒட்டியே இருத்தல் வேண்டும். அனைத்துலகக் கருத்தரங்கம் என்பதால், கருத்துப்பிழை, எழுத்துப்பிழை எதுவும் வாராமல் கட்டுரையாளர்களே காத்துக்கொள்ளும்படி வேண்டுகிறோம்.

தங்கும் இடம் :

சூலை 20,21,22,23,24 பகல் 12 மணி வரை மட்டும் பேராளர்கள் தங்க இடம் ஏற்பாடு செய்யப்பெறும். மேற்குறிப்பிட்ட நேரத்திற்குப் பிறகு, பேராளர்கள் தங்க விரும்பினால், அவர்கள் தத்தம் பொறுப்பிலேயே உரிய முன்னேற்பாடுகளைச் செய்துகொள்ளுதல் வேண்டும்.

உணவு ஏற்பாடு :

சூலை 20 இரவு முதல் 21, 22 ஆகிய நாட்களுக்கு உணவு ஏற்பாடு செய்யப்பெறும். இந்திய மதிப்பில் ரூ. 5000/- (ரூபாய் ஐந்தாயிரத்தைப்) பதிவுக் கட்டணமாகச் சென்னையில் மாற்றத்தக்க வரைவோலையாகப் (D.D) பின்வரும் பெயரில் எடுத்துக் கட்டுரையுடன் சேர்த்து அனுப்புதல் வேண்டும். பதிவுக் கட்டணம் இன்றி வரும் கட்டுரைகள் ஆய்வுக் கோவையில் சேர்க்கப்படா. பேராளர்கள் பெயர்கள் பதிவு செய்யப்படா.

வரைவோலை (D.D) எடுக்கவேண்டிய பெயர் :

**K.P. ARUNACHALAM** இடம் : சென்னை

போக்குவரத்துச் செலவு :

தங்கள் தாயக ஊரிலிருந்து, பங்குபெறும் பேராளர்கள் தங்குவதற்கு உரிய விடுதிவரை வந்து திரும்பவேண்டிய விமானப் பயணச்சீட்டு, பிற வாகனப் போக்குவரத்துச் செலவு முழுதும் கட்டுரையாளரின் பொறுப்பிற்கு உரியனவாகும்.

இங்ஙனம்

மாநாட்டு ஏற்பாட்டாளர்கள்

# வைப்புமுறை மாற்றத் தக்கதா?

(முனைவர். மு. பழனியப்பன்)

திருக்குறள் தமிழ் நூல். தமிழர் நூல். தமிழர்க்கான நூல். இந்தியத் தத்துவங்களின் பிழிவு. உலகின் பொதுமறை. இவை அனைத்தும் திருக்குறளின் முழுமை கருதி அந்நூலுக்குக் கிடைத்த பெருமைகள்.

திருக்குறளின் முழுமை என்பது அதன் முரண்பாடற்ற கருத்துவளம், ஏற்றத்தாழ்வில்லா பொது நோக்கு, எக்காலத்திற்கும் பொருந்தும் உண்மை போன்ற பலவற்றால் ஏற்பட்டதாகும். இந்த முழுமையைக் காத்து நிற்பது திருக்குறளின் யாப்பு, அதன் எண்ணிக்கை ஒழுங்கமைவு முதலியனவாகும்.

திருக்குறளின் யாப்பு எக்குறளிலும் குற்றம் குறை இல்லாததாக இடையீடு செய்ய இயலாததாக மிகச் செறிவை, செம்மையை உடையது. அதற்கு உரைகள் மாறுபடலாமே தவிர சொல் நீக்கத்தையோ அல்லது மாற்றத்தையோ அல்லது இடப்பெயர்வையோ எவரும் ஏற்படுத்திவிட முடியாத அளவிற்கு அதன் யாப்பு அமைந்துள்ளது.

திருக்குறளின் எண்ணிக்கை அளவு என்பது ஓரளவிற்குச் செறிவும் செம்மையும் உடையதே என்றாலும் அது யாப்பு அளவிற்கு மிகு கட்டுப்பாடு உடையது அல்ல. ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட்பாக்கள், நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்கள், மூன்று பால்கள் என்ற இந்த எண்ணிக்கை வரையறை வேறு எவரும் மிகைப் பாடல்களைப் புகுத்திவிடமுடியாத அளவிற்கு ஓரளவு கட்டுப்பாட்டைத் தருவது. அதாவது அந்தாதி போன்ற இலக்கிய வகைமைகள் போல இத்தனைப் பாடல் என்ற வரையறையைத் திருக்குறளில் வள்ளுவர் ஏற்படுத்திக் கொள்ளவில்லை. அதிகாரத்திற்குப் பத்துக் குறட்பாக்கள் என்பதில் இருக்கும் கட்டுப்பாடு எத்தனை அதிகாரங்கள் எத்தனை பால்கள் என்பதில் இல்லை. எனவே இந்த அமைப்பு குறள் அதிகாரங்களை முன்பின்னாக வைத்துக்கொள்ள, பால்பிரிவுகளை முன் பின்னாக வைத்துக்கொள்ள இடம் தருவதாக உள்ளது.

இருப்பினும் இதன் முழுமையை மரபு வழியாகக் கூறப்பெறும் சில கருத்துகள் காத்துவருகின்றன. 1. திருக்குறள் "அ' என்ற எழுத்தில் தொடங்கப்பெற்று "ன்" என்ற மெய்யெழுத்தில் முடிவதாக உள்ளது.

2. அறம் பொருள் இன்பம் என்ற பொருள் வரிசையின்படி பால்கள் அமைக்கப்பெற்றுள்ளன. 3. எக்காலத்திற்கும் எல்லார்க்கும் ஏற்ற - நூல் இவை போன்ற திருக்குறள் பற்றிய சில கருத்துகள் அதன் முழுமையைக் காப்பதற்காக மரபு வழியாகக் கூறப்படும் கருத்துக்களாக உள்ளன.

இக்காப்புகளைக் கடந்து திருக்குறளின் முழுமையைப் பல வகைகளில் மாற்றியமைக்கும் போக்குகள் தற்போது உருவாகி வருகின்றன. அவற்றின் வன்மை மென்மைகளைத் தமிழ் உலகம் ஆராய்ந்து ஏற்கவோ அல்லது மறுக்கவோ வேண்டி உள்ளது.

பரவலாக்கம் என்ற அடிப்படையில் மக்களிடம் அதிகமாகச் சென்றடையச் செய்யப்பெற்ற இலக்கியங்கள் அனைத்திற்கும் இந்தச் சூழல் நிகழ்ந்துள்ளது. சிலப்பதிகார வஞ்சிக்காண்டம் இளங்கோ பாடியதா இல்லையா அதனை ஏற்பதா வேண்டாமா என்ற கருத்தின் அடிப்படையில் விவாதங்கள் தொடர்ந்து வந்தாலும் கூட அதற்கு தமிழ்மக்கள் தந்த தீர்ப்பு ஏற்கலாம் என்பதே. சிலப்பதிகாரப் பதிப்புகள் அனைத்தும் வஞ்சிக் காண்டத்தை ஏற்றிருப்பதன் வாயிலாகச் சிலப்பதிகார வஞ்சிக் காண்டத்தை தமிழ் மக்கள் இழக்காமல் வைத்திருக்கிறார்கள் எனத் தெளியலாம். கம்பராமாயணத்திற்கும் இதுபோன்ற ஒரு சூழல் வந்தது. ரசிகமணி கம்பராமாயணப் பாடல்களில் பலவற்றைத் தள்ளியபோதிலும், கம்பராமாயணத்தை மக்களிடம் முன் எடுத்துச் சென்ற கம்பன் கழகங்கள் அதற்கான ஒரு பதிப்பை வெளியிட்டபோது (சென்னை கம்பன் கழகப் பதிப்பு) மிகைப் பாடல்கள் என்ற தலைப்பின் கீழ் கம்பராமாயண ஏட்டுப் பிரதிப் பாடல்கள் அனைத்தையும் ஏற்றுக்கொண்டு பதிப்பு செய்திருப்பது இங்கு கருதத்தக்கது. தொல்காப்பியத்திற்கும் இது போன்ற ஒரு சூழல் வந்தது. அதனை இயல் மாற்றிப் பதிப்பிப்பது (எடுத்துக் காட்டிற்குப் புலவர் குழந்தை உரை) நூற்பாக்களைப் புகுத்துதல் போன்றன நிகழ்ந்தபோதும் இன்றளவும் உரையாசிரியர்கள் பலரால் ஏற்கப் பெற்ற பொது வடிவம் மக்களுக்குக் கிடைத்துவருவது அதன் பழைய மரபுத் தன்மைக்குக் கிடைத்த வெற்றியே ஆகும்.

இதன் தொடர்பாய் திருக்குறளையும் சிந்திக்க வேண்டி உள்ளது. திருக்குறளுக்கு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக உரைகள் தோன்றி வருகின்றன. இன்னும் சொல்லப் போனால் தமிழாசிரியர் ஒருவர் தன்னைத் தமிழாசிரியராக நிலை நிறுத்திக் கொள்ள வேண்டுமானால் திருக்குறளுக்கு உரை எழுதியே ஆகவேண்டும் என்ற

நிலை தற்போது ஏற்பட்டுள்ளது. இதன் மூலம் திருக்குறள் மிகு பரவலாக்கம் பெற்ற நூல் என்ற பெருமையைப் பெற்றுவிட்டது. என்றாலும் அதன் மிகு பரவலாக்கம் அதன் முழுமையைக் கூறுபோட்டு விடும் அளவிற்கு வளர்ந்து வருகிறதோ என்ற கவலையும் ஒருபுறம் ஏற்படுகிறது.

திருக்குறளைப் பரப்பும் பதிவு பெற்ற நிறுவனங்கள், பதிவு பெறாத நிறுவனங்கள், பல்கலைக் கழகம் போன்ற கல்வி நிறுவனங்கள், தனி மனிதர்கள், குழுமனிதர்கள் என்ற அனைத்துக்கும் அனைவருக்கும் தற்போது திருக்குறள் பிரதி தேவை என்ற நிலையிலேயே திருக்குறளின் தேவை அதிகரித்துவிட்டது. திருக்குறளின் எளிமை, தேவை கருதி அது பல வெளியீட்டு நிறுவனங்களினால் வெளியிடப் பெற்றுவருகிறது. பனையோலை, தாள், சுவர், பேருந்தின் உள்மேல் பகுதி, திரைப்படத் தொடக்கம், வானொலி, தொலைக்காட்சி போன்றவற்றில் இடம் பெறும் நிகழ்ச்சிகள், கணினி மென்பொருட்கள் போன்ற பல தளங்களில் திருக்குறள் பயன்படுத்தப்பெற்று வருகிறது. இதுதவிர திருக்குறள் கவனக நிகழ்ச்சி, திருக்குறள் வகுப்பு, கருத்தரங்கு, முற்றோதல் முதலான சிறப்புச் செயல்பாடுகளும் தமிழகத்தில் நிகழ்ந்து வருகின்றன. தமிழக அரசும் திருக்குறளை முன்னிறுத்துவதில் தனிப் பங்காற்றி விருதுகளும், பதக்கங்களும் அளித்து வருகிறது. இது தவிர ஆய்வு நிறுவனங்கள் மொழிபெயர்ப்புப் பணி, ஒப்பிடும் பணி முதலியவற்றைச் செய்து வருகின்றன.

இத்தகைய பல தளத் தேவை உடைய திருக்குறள் பிரதிக்குப் பொதுமை அல்லது முழுமை என்பது காப்பாற்றப்பட வேண்டிய ஒன்றாகும். அந்த முழுமை கருதியே திருக்குறள் தொடர்புடைய அனைவரையும் ஒருங்கிணைக்க முடியும். இந்த ஒருங்கிணைப்பை இதுவரைக் காப்பாற்றி வந்தத் தமிழ் உலகம் தற்போது திருக்குறளை வெளியிடுவதில் சில மாற்றங்களைக் கண்டுவருகிறது. எழுத்துக்களை தரப்படுத்தி ஒரே நிலைப்படுத்துவது, தமிழ்க் கணினி எழுத்துருக்களைத் தரப்படுத்தி ஒரே நிலைப்படுத்துவது போன்றவற்றில் பல சிக்கல்களைச் சந்தித்து வரும் தமிழ் உலகம் திருக்குறளையும் நிலைப்படுத்த வேண்டிய சூழலுக்குத் தற்போது தள்ளப்பெற்றுவிட்டது.

(தொடரும்)

"கம்பன் என்றொரு மானிடன்" கட்டுரை அடுத்த இதழில் தொடரும்.

# "அருணாலயக் குமுறல்"

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி -9)

ஆழ்கடல் குமுறு மானால்
அந்தோஅது சுனாமி யாகும்!
ஏழ்கடல் குமுறு மானாலங
எங்கேஎவர் போவ தென்று
சூழ்கடல் உலகத் தார்கள்
சுழன்றேதான் நினைக்கும்போது
பாழ்கடல் குமுற லெல்லாம்
பஞ்சாகும் பலரைப் பார்த்தால்!

பூமிதான் குமுறு மானால்
பூகம்பம் என்றே சொல்வார்!
பூமியின் அடிப்பா கந்தான்
பூசலிட்டுக் குமுறு மானால்
பூமிமேல் மலைக ளெல்லாம்
பூப்போலச் சிதற, ஆங்கே
பூமிமேற் பரப்பெல் லாமும்
பூக்காதோ நெருப்பா றம்மா?

ஒருமுறை குமுறி விட்டால்
ஓய்ந்திடும் கடலும்! மீண்டும்
இருமுறை குமுறி னாலோ
ஏங்கிடும் மக்கள் கூட்டம்
பெருமுறை யாகக் குமுறிப்
பேரிடர் வருமென் றெண்ணி
வருமுறை யாக வாழும்
வாழ்க்கையைத் தேடு வாரே!

இவ்வாறு இயற்கை செய்யும்
இன்னலுக் காளா கின்ற
இவ்வைய மக்கள் தானும்
இவற்றினை இன்னா வாகச்
செவ்வையாய் நினைத்திட் டாலும்
செகத்தினில் பலபேர் செய்யும்
ஒவ்வாத செயல்க ளன்றோ
ஒழியாத குமுற லம்மா?

இயற்கையின் குமுறல் தானும்
எப்போதும் இருப்ப தில்லை!
இயற்கைக்கு மாறாய் நாட்டில்
இருப்போருள் சிலபே ரான
செயற்கையாய் சிறியர் செய்யும்
சிறுமையின் குமுறல் தானே
இயற்கையாய் எப்போ தும்மே
இன்னலைச் செய்யு தம்மா!

பாலியல் பிழைகள் தம்மைக்
பாங்காகச் செய்யும் ஒடு
காலிக ளாகப் பல்லோர்
காசுக்காய் செய்ய, நாட்டில்
வேலியே பயிர்மேய் கின்ற
வேதனை வளர்வ தோடே
போலிகள் பெருகக் குமுறல்
போக்குமே வளரு தம்மா!

சிறுமியர் தம்மைக் கொன்று
சிங்கார வீட்டைத் தானும்
உறுபெரும் சுடுகா டாக்கி
உள்ளுக்குள் புதைத்திட் டாலும்
* இறுதலிலா எலும்பெல் லாமும்
இயல்பாகக் காட்டிக் கொடுத்த
சிறுமையின் போக்கெல் லாமும்
சிந்தித்தால் குமுறல் தானே!

வாழுதல் வேண்டி சில்லோர்
வறுமையில் வாடு வோரின்
* ஊழ்சிறு நீர கத்தை
உறிஞ்சியே விற்று வாழும்
தாழ்வினை எண்ணும் போது
தருமமோ இதுதான் என்று
ஆழ்மனம் குமுறா தோதான்
அநீதியைக் காணும் போதே!

(தொடரும்)

இறுதலிலா - அழியாத

## இலவச சைவ சமயப் பயிற்சி வகுப்புகள்

குருவருள் துணை கொண்டு எதிர்வரும் 11.05.2007 முதல் 17.05.2007 வரை ஏழு நாட்கள் திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியை அடுத்துள்ள தென்னாங்காலிலும் 19.05.2007 முதல் 23.05.2007 வரை காஞ்சிபுரம் மாவட்டம் அச்சிறுபாக்கத்திலும் தனித்தனியாக நடத்தப்பெறவுள்ள மாநில அளவிலான சைவ சமய பயிற்சி வகுப்புகளில் பங்கேற்றுப் பயன்பெற விரும்புவோர் தாம் பங்குபெற விரும்பும் மையப் பெயருடன் தம்மைப் பற்றிய முழுமையான விவரக் குறிப்புக்களைத் தன்முகவரியிட்ட கடித உரையுடன் தி. திருநாவுக்கரசு மாநில அமைப்பாளர், 8/49 மேலைச் சாலைத்தெரு, சுந்தரப்பெருமாள்கோயில் - 614 208 எனும் முகவரிக்கு 25.04.2007 ஆம் நாளைக்குள் விண்ணப்பித்துப் பயன்பெற மைய அமைப்பாளர்கள் அ.வே. முனுசாமி, தருமன், முருகப்பன் ஆகியோர் அன்புடன் வேண்டுகின்றனர்.

**–தி. திருநாவுக்கரசு**

## திருக்கயிலாய பரம்பரை வேளாக்குறிச்சி ஆதீனம்
### திருப்புகலூர் - 609 704
### சைவசமயப் பயிற்சி வகுப்பு

திருப்புகலூர் அருள்மிகு அக்னீஸ்வரசுவாமி திருக்கோயில் அப்பரடிகள் ஐக்கிய விழாவில் வேளாக்குறிச்சி ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசன்னிதானம் திருவுளப்பாங்கின் வண்ணம் திருப்புகலூரில் 03.05.2007 முதல் 09.05.2007 வரை ஏழு நாட்கள் தோத்திரம், சாத்திரம், இலக்கியம், வரலாறு, புராணம், இதிகாசம், கல்வெட்டு பொருள்களில் காலை, மாலை இருவேளைகளிலும் திருக்கோயில் வளாகத்தில் சைவ சமயப்பயிற்சி வகுப்புகள் அறிஞர் பெருமக்களால் நடத்தப்பெறவுள்ளது. 10.05.2007 அன்று பயிற்சியில் பங்கேற்றவர்களுக்கு சான்றிதழ் வழங்கப்படும். பயிற்சி பெற விரும்பும் அன்பர்கள் கீழ்க்காணும் முகவரிக்கு பெயர், கல்வித்தகுதி, முகவரி ஆகியவற்றுடன் விண்ணப்பித்துப் பயன்பெறலாம். உணவு, உறையுள் இலவசமாக வழங்கப்படும்.

தொடர்பு முகவரி :

**மேலாளர், வேளாக்குறிச்சி ஆதீனம்**

திருப்புகலூர் - 609 704, (நாகப்பட்டினம் மாவட்டம் / வட்டம்)

தொ.பே. எண். 04366 - 292300

# அறிவியல் உறவும் - ஆன்மீக உறவும்

(டாக்டர். கே. பாலகிருஷ்ணன்)

குன்றக்குடி கிராமத் திட்டக்குழு, தொழில் துறை மற்றும் மைய உப்பு, கடல் வேதியல் ஆய்வு மையம் ஆகியவை இணைந்து வாலி நோக்கத்தில் கடல் வளம் சார்ந்த தொழில்கள் பற்றிய கருத்தரங்கு நடத்தி இராமநாதபுரம் மாவட்டத்திற்கு ஏற்ற தொழில்களைப் பற்றி முடிவு செய்தது என்று முன் கட்டுரையில் பார்த்தோம்.

அதற்கு செயல்வடிவம் கொடுக்கும் வகையில் தவத்திரு அடிகளார் அவர்களுடன் நானும் குஜராத் மாநிலத்தில் உள்ள பவநகருக்குச் சென்றோம். ஆய்வகத்தின் இயக்குநர் பேராசிரியர் K. நடராசனும் அடிகளார் அவர்களின் வருகைக்கு சிறந்த ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். அடிகளார் அவர்களிடம் பேராசிரியர் மிகுந்த மரியாதையும், அன்பும் கொண்டவர் என்பது குறிப்பிடத்தக்கது.

சென்னையிலிருந்து விமானம் மூலம் அஹமதாபாத் வழியாக பவநகர் சென்றடைந்தோம். ஆய்வகத்தின் விடுதியில் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். ஒரு நாள் முழுவதும் ஆய்வகத்தின் பல பிரிவுகளைப் பார்வையிட்ட பிறகு, தொழில் நுட்பங்கள் பரிமாற்றம் செய்யும் பிரிவுடன் கலந்துரையாடப்பட்டது. இயக்குநர் பேராசிரியர் நடராசனும் உடன் இருந்தார்கள். தொழில் நுட்பங்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டு ஆய்வு செய்யப்பட்டன.

1. கடல் நீரிலிருந்து தயாரிக்கக்கூடிய வேதியல் பொருட்கள்
2. கடல்நீரில் வளரும் பாசிகள் (தாவரங்களிலிருந்து) பெறக்கூடிய தொழில்கள்
3. கடலோரங்களில் வளர்க்கக்கூடிய பணப் பயிர்கள்

முன்பு குறிப்பிட்டவாறு கடல்நீர் ஆவியாக மாறும்பொழுது முதலில் கால்சியம் சல்பேட் (ஜிப்ஸம்) உப்பு பிரிகிறது. இதைத் தூய்மைப்படுத்தி ப்ளாஸ்டர் ஆப் பேரிஸ் தயாரிக்கவும், சாக்பீஸ் தயாரிக்கவும் திட்டமிடப்பட்டது. அடுத்தபடியாக நமக்குக் கிடைப்பது நாம் சாப்பிடும் உப்பு. அதிலிருந்து கால்நடைகளுக்கு வேண்டிய உப்பு, மேசை உப்பு மற்றும் அயோடின் கலந்த உப்பு தயாரிக்கலாம் என்றும் முடிவு செய்யப்பட்டது.

அடுத்தகட்டமாக மருந்துக்கு வேண்டிய மெக்னீசியம் ஹைட்ராக்ஸைடு, உரத்திற்கு வேண்டிய பொட்டாசியம் குளோரைட் தயாரிக்கவும் முடிவு செய்யப்பட்டது.

கடல் தாவரங்கள் (பாசிகள்) பல வகையுள்ளன. அவற்றில் ஒன்று "அகர் அகர்" என்ற பொருள் தயாரிப்பதற்கான தாவரங்களைச் சேகரித்து (கெலிடில்லா அஸிரோஸா) தொழிலை ஆரம்பிக்க முடிவு செய்யப்பட்டது. இது உணவு, மருந்து மற்றும் ரொட்டி தயாரிக்கும் தொழிற்சாலைகளில் பயன்படுத்தப்படும் ஒரு முக்கிய பொருள் ஆகும். இந்தத் தாவரம் பெருமளவு குஜராத் மாநிலத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. ஆகையினால் அடிகளார் அவர்கள் இந்தத் தாவரத்தை அதிக அளவில் கூட்டுறைவுத் துறை மூலமாக பயிர் செய்து "அகர்அகர்" தயாரிக்கத் திட்டமிட்டார்கள். அதற்கான முன்னோடித் திட்டத்தையும் அந்த ஆய்வகத்தின் மூலம் அமைக்கச் செய்தார்கள். அதன் விளைவுதான் இன்று இத்தாவரம் வியாபார ரீதியில் கடலில் பயிரிடப்பட்டு வருகிறது என்று எண்ணலாம்.

மற்றொரு தாவரம் ஸர்கஸ்ஸம் லிட்டி. இது "அல்ஜீனிக் அமிலம்" என்ற பொருள் தயாரிப்பதற்கு பயன்படுகிறது. இப்பொருள் ஜவுளி மற்றும் காகிதத் தொழிற்சாலைகளில் பயன்படுத்தப்படுகிறது. இதற்கான முயற்சிகளும் திட்டமிடப்பட்டன.

மற்றொரு முக்கியமான திட்டம் கடலோரங்களில் மணற்பாங்கான இடங்களில் பணப்பயிர்கள் சாகுபடி செய்வது.

"ஹோஹோபா" என்ற பணப்பயிர் மெக்ஸிகோ, கலிபோர்னியா, அரியோனா போன்ற பாலைவனப்பகுதிகளில் வளரும் பயிராகும். இதன் விதைகளிலிருந்து கிடைக்கக்கூடிய எண்ணெயின் விலை மிகவும் உயர்ந்தது. அதிவேக இயந்திரங்களில் பயன்படுத்தப்படும் உராய்வு எதிர்ப்பு எண்ணெய், மருந்துகளுக்கான பூச்சுகள் மற்றும் அழகு சாதனங்கள் தயாரிக்கும் பொருட்களில் பயன்படுத்தப்படுகிறது. இது உலகச் சந்தையில் மிகவும் தேவையுள்ள பொருளாகக் கருதப்படுகிறது.

இந்த ஆய்வுக் கழகம் "ஹோஹோபா" (JOJOBA) என்ற செடிகளை நம் நாட்டில் வளர்ப்பதற்கான ஆராய்ச்சிகளை மேற்கொண்டு, வெற்றிகரமாக குஜராத் மற்றும் ஒரிஸா மாநிலங்களில் நடைமுறைக்கு கொண்டு வந்திருக்கிறது.

இந்தப் பயிரை மாதிரியாக 10 ஏக்கர் நிலத்தில், கடலோரத்தில் மணற்பாங்கான இடத்தில் வளர்ப்பது என்று முடிவு எடுக்கப்பட்டது. மாவட்டத் துறைகளுடன் அந்த ஆய்வகம் இணைந்து செயல்பட தவத்திரு அடிகளார் அவர்கள் பெரிதும் உதவினார்கள்.

இந்த திட்டங்கள் அனைத்தும் செயல்பட அவர்கள் விரைவான நடவடிக்கை எடுத்தார்கள்.

பிறகு பவநகரிலிருந்து கூட்டுறவுப் பால்பண்ணை மற்றும் பால் பொருட்கள் தயாரிக்கும் ஆனந்த் கூட்டுறவுச் சங்கத்தை சென்று பார்த்தார்கள். நமது கூட்டுறவு பால் உற்பத்தி சங்கத்தையும் அதே போன்று மேம்படுத்த வேண்டும் என விருப்பப்பட்டார்கள்.

குஜராத் வேளாண் மக்கள் காடுவளர்ப்பில் சில புதிய உத்திகளை கடைபிடித்தார்கள். முக்கியமாக வேம்பு மரங்களை மூங்கிலுக்குப் பதிலாக பயன்படுத்தும் வகையிலும், ஏக்கருக்கு நல்ல வருவாய் பெறக்கூடிய வகையிலும் உற்பத்தி செய்தார்கள். அதனுடைய தாக்கம் தான் குன்றக்குடி இளைஞர் பண்ணையில் தேக்கு மரக்கன்றுகள் பயிரிடப்பட்டன.

முடிவில் சோமநாதபுரம் சென்று, அங்குள்ள கோயிலைப் பார்த்துவிட்டு குஜராத் பயணத்தையும் முடித்துக்கொண்டு வந்தோம்.

அடிகளார் அவர்கள் அறிவியல் பூர்வமாகவும், மக்களின் தேவைக்கேற்பவும், அதே நேரத்தில் நடைமுறை சாத்தியங்கள் மற்றும் சுற்றுப்புறச் சூழல்களை மனதில் கொண்டு தொழில் நுட்பங்களை சிந்தித்து தேர்வு செய்யும் திறன் படைத்திருந்தார்கள். அதற்கு விஞ்ஞானிகள் பக்கபலமாக இருந்தார்கள். கடல் சார் தொழிலகங்களின் தொழில்நுட்ப விவரங்கள் "அறிக அறிவியல்" இதழில் வெளியிடப்படும்.

**தமிழ் நாகரிகம் செழித்து வளர இந்திய நாகரிகம் செழிக்க வேண்டும். இந்திய நாகரிகம் செழித்து வளர உலக மனித நாகரிகம் செழிக்க வேண்டும். இவை தவிர்க்க முடியாதவை. இத்தகு ஒருமைப்பாட்டைக் கற்றுக்கொடுப்பதே இன்றையக் கல்வி.**

**– அருள்நெறித்தந்தை**

# சிந்தனை வட்டம்

"உயிர்வருக்கமாலையைப் படித்து மகிழ்ந்தேன். திருநாவுக்கரசு சுவாமிகளின் தாண்டகங்களைப் போலக் கவிஞர் அவர்கள் பாடியுள்ளார்கள். திருவாசகத் தோய்வும், சித்தாந்தத் தோய்வும், சண்முகநாதப் பெருமானின் அருளும் மாலையை மணக்கச் செய்துள்ளன".

**–மு. வில்வநாதன்,** சென்னை

"உயிர்வருக்க மாலை படித்தேன். அது முருகப்பெருமானின் தோளிலும் எனதுயிரிலும் ஒளிர்வதை உணர்ந்தேன். எல்லோரும் பாட்டைச் செய்கின்றார்கள். மிகச்சிலர் மட்டுமே உள்ளத்திலிருந்து ஊற்றெடுக்கும் பாடலாகப் பாடுகிறார்கள். இந்தப் பாட்டு இந்த வகையைச் சார்ந்தது அளவிலா மகிழ்ச்சியுற்றேன்".

**–மா. பட்டியப்பனார்,** பேரூர், கோவை

"தேசத்தின் சொத்து" என்ற தலைப்பில் சமூகம் எழுதியுள்ள கட்டுரைச் செய்தி அமரர் ஜீவாவை நம் கண்முன் நிறுத்துகின்றன; அவரது பண்பாடு அதில் பளிச்சிடுகின்றன.

– புலவர் **க. கதிரேசன்,** பூவாளூர்

"ஜீவாவின் நூற்றாண்டு விழாக் கட்டுரை மிக அருமை. முக்கியமாக அவர் முழக்கம் கேட்டபின்னும் தமிழகத்து மக்களின் செவிகள் கேளாத்தன்மை அடைந்ததுதான் வேதனையிலும் பெரும் வேதனை என்ற வரிகள் வைர வரிகள். எனக்கும் அந்த குறைபாடு உண்டு".

**–தமிழன் நூலகம்,** சென்னை

"பாரதியார் பற்றிய தேவகி முத்தையா அவர்களது பேச்சில் 10ம் பக்கத்தில் மண்ணைக் கட்டினால், அதிலுள்ள வானத்தைக் கட்டியதாகாதா? என்று சுட்டியிருப்பது மிக அருமை.

மரு. பரமகுரு அவர்களின் குன்றக்குடி சண்முகநாதப் பெருமான் உயிர்வருக்கமாலை மிக நன்று.

டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன் இருவரும் தொடர்ந்து எழுதும் குன்றக்குடிக் குடவரை கல்வெட்டு பற்றிய ஆய்வு மிக அருமை".

காசி ஸ்ரீ **V.G. தெய்வேந்திரன்,** அருப்புக்கோட்டை



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின் அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

**பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.**

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - April 2007 Price Rs. 5-00
Date of Publication 20-04-2007
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008



பெறுநர்

திரு ......................................................... அவர்கள்

ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி)

1100

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166